ஆதி சங்கரர் அருளிய

# மாத்ருகா பஞ்சகம்

(உரையுடன்)



*Compiled by*

**பி.ஆர். நடராஜன்**

பல்லிப்பாக்கம் வேங்கடேச தீக்ஷிதர் ஸ்மிருதி டிரஸ்ட்
பல்லிப்பாக்கம், திண்டிவனம் தாலுக்கா - 604307



எங்களது தாயார்

மாதுஸ்ரீ **முத்தாம்பாள்** அவர்களுக்கு

பணிவன்புடன் சமர்ப்பணம்

அம்மா, எல்லை ஏதும் உண்டோ உன் அன்புக்கு!

**ஆதி சங்கரர்**

அருளிய

# மாத்ருகா பஞ்சகம்

(உரையுடன்)

*Compiled by*

**பி.ஆர். நடராஜன்**

*Published by*

பல்லிப்பாக்கம் வேங்கடேச தீக்ஷிதர் ஸ்ம்ருதி டிரஸ்ட்,

3, மூன்றாவது கிராஸ் தெரு, கண்ணன் நகர், மடிப்பாக்கம்,

சென்னை - 600 091.



முதலில் ஒரு கதாசிரியனின் தாய்மையை வர்ணிக்கும் கற்பனையை நாம் பார்ப்போம்.

“நான் பிறந்தவுடன் ‘ஈன்றவளே, கொண்டுவர என்னிடம் எதுவுமில்லை. வெறும் கையோடு இருந்தேன், நீயோ என்னை இந்த உலகத்திற்கு கொண்டு வந்து விட்டாயே! பயமாய் இருக்கிறதே! நான் என்ன செய்யப் போகிறேன்’ என அழ ஆரம்பித்தேன். நான் எப்பொழுது அழுவேன் என்று எதிர்ப்பார்த்தவள் போல என் அழுகுரலைக் கேட்டுத் பரவசமுடன் துடித்தாள். அவளுடைய இரு கண்கள் என்னைப் பூரிப்புடன் முதலில் நோக்கின. ஒரு தனி ஒளியோடு கூடிய அந்தக் கண்களிலே பெருமிதம் இருந்தது. துரிதமாக என் அருகில் வந்து, கையிரண்டில் என்னை அள்ளிக் கொண்டாள். அந்த முதல் ஸ்பரிசத்தில், அந்த அன்பின் கதகதப்பில் சுகமொன்றை உணர்ந்தேன்.”

“பிறகு நெஞ்சோடு என்னை அணைத்துக் கொண்டாள். அவளது இதயத் துடிப்பின் சந்தத்திலே இதமொன்றைக் கண்டேன். அவள், ஆனந்த மிகுதியால் என் நெற்றியும் தலையும் சேருமிடத்தில் முத்தமிட்டு முகர்ந்தாள். என் மேல் அவள் காட்டும் பரிவில் திக்கு முக்காடினேன். நிம்மதி தலைத் தூக்கியவுடன் வயிற்றில் ஏதோ உணர்வு ஏற்பட்டது. மறு முறை அழுதேன். உடனே ‘என் ராஜா, பசிக்குதாடா’ என்று கவலையுடன் கேட்டாள். என் தேவையை எனக்கும் முன் அறிந்து அமுதத்தினை புகட்டினாள். சற்று மெய் மறந்து கண் அசந்தேன். என்னுள்ளே இயற்கையின் ஜீவ தத்துவ பரிணாமம் தொடங்கியது. உடல் அசுத்தமாகியது. சற்று கூட அசிங்கம் பாராமல் உடனே என்னை தூய்மைப் படுத்தினாள். உடைக் கொடுத்து மான உணர்ச்சிகளைப் புகுத்தினாள்.”

“நன்றியில் மறுபடியும் அழ ஆரம்பித்தேன். “அழக்கூடாது. அம்மா நானிருக்கேன். எதுக்காக அழறே, ராஜா” என்று நம்பிக்கையை ஊட்டினாள். என்னைக் காக்கும் கவசம் உடனிருப்பதை உணர்ந்தேன். “அம்மா,” “அம்மா,” அது என்னவோ அந்த சொல்லைக் கேட்கும் போதே இனித்தது என் “அம்மா” என்னை அணைத்து கொஞ்சிக் கொண்டே பாடினாள். இது தான் ஸ்வர்க்கமா? இதைவிடப் பெரிதாக நான் எங்கிருந்து என்ன கொண்டு வந்திருக்க போகிறேன்? அம்மாவை சரணடைந்தேன். அவள் அணைப்பில் பயம் கவலை எதுவும் இல்லாமல் போயிற்று. நிம்மதியில் நான் மெல்ல கண்ணுறங்கலானேன்.”

“என் அம்மா” தாய்மை அடைந்ததை ஒரு அந்தஸ்தை அடைந்தவள் போல் பெருமிதம் கொண்டாள்... அதனால் மறுபடி நான் விழித்தப்போது ஒரு “தாயின்” பெருமையோடு எனக்கு மற்ற உறவுகளைச் சொல்லிக் கொடுத்தாள். எனக்கு “அம்மா” என்பவள் தானே சொந்தங்களில் சந்தேகமின்றி முதன்மையானவள்.”

தாய்ப் பாசம் எப்படிப்பட்டது என்பதை இனிப் பார்ப்போம். மற்ற சுகங்களும் சொத்துக்களும் முயன்று பெறவேண்டும். அவைகளுக்கான தகுதியைச் சம்பாதித்துக் கொள்ளவேண்டும். தாய்க்கு தன் குஞ்சு பொன் குஞ்சு என்பார்கள். அதனால் தாயன்பை பெற வேறு தகுதி எதையும் தேடிக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. சொத்துக்கள் கிடைத்தாலோ பெரும் முயற்சி கொண்டு அவைகளை நாம் காப்பாற்ற பாடுபட வேண்டும். தாய்ப் பாசம் என்னும் விலை மதிக்க முடியாத அன்புக்கு காப்பு பெட்டகமோ, வேலியோ, மற்ற “காபந்து” எதுவுமே தேவையில்லை. அன்னையன்பு என்னும் அரும் பொக்கிஷமோ நமக்கு சுலபமாக கிடைக்கும். அதற்கோ விலை ஒன்றுமில்லை. எல்லை ஏதும் இல்லை. எக்காலத்திலும் மாறாதது. குறைவில்லாமல் ஆல விருக்ஷம் போல் ஆதரவு என்னும் நிழலை என்றும் தரக்கூடியது.

பிறக்கிற போதே அம்மாவிடம் தான் ஒட்டிக்கொள்கிறோம். அவள் உயிரில், அவள் உடம்பில் அவள் உணவில் அவள் உணர்வில் நாம் உண்டாகிறோம். பிறந்த பிற்பாடும் ஆஹாரம் தருவதிலிருந்து ஸகலத்துக்கும் அவள் தான் கதியாய் இருக்கிறாள். அவளையே முழுக்க நம்பி, “எல்லாம் அவள் செய்வாள், பார்த்துக் கொள்வாள்”

என்று திட உறுதியோடு கவலையில்லாமல் அவளிடம் நம்மை உரிமையோடு ஒப்படைக்கிறோம். தன் மக்களைப் பொருத்த வரையில் அவள் ஒரு தன்னலம் கருதாதத் தியாகி.

உண்டிக் கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் என்பார்கள். உயிரையும் கொடுத்து முதல் ஆகாரமாக, தனது ரத்தத்தைப் பாலாக்கி, பாசம் பொங்க பெருமிதத்தோடு அணைத்து அம்ருதத்தை வஞ்சனையின்றி வழங்குவது அன்னை தான். பிறகே மற்ற அன்னங்களை உண்டு மனித சரீரம் வளர்கிறது

“தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லை.” அதுதானே உண்மை. இதில் யாருக்காவது எந்தவித சந்தேகமாவது இருக்க முடியுமா? அன்னையைவிட நம் நலனில் சுயநலமில்லாத அக்கறை கொண்டவர் வேறு யாரும் இருக்க வாய்ப்பேதும் உண்டா? நாம் அனைவரும் நன்கு அறிந்த மற்றொரு சான்றோர் வாக்கு “அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்” என்பதாம். அதிலும் அன்னைக்கே முதல் மரியாதை தரப்படுகிறது. ஆகவே தீர்மானமாக நாம் வழிபட வேண்டியவர்களுள் முதல் இடம் தாய்க்கு தான் என்பதில் மாற்று கருத்துக்கு இடம் எங்கிருந்து வரும்!

தைத்தரீய உபநிஷத்தின் சீக்ஷாவல்லியில் தர்ம சிந்தனையை விசேஷித்து உபதேசிக்கும் இடத்தில் “மாத்ரு தேவோ பவ, பித்ரு தேவோ பவ, ஆசார்ய தேவோ பவ, அதிதி தேவோ பவ,” அன்னை, தந்தை, குரு அதிதி ஆகியோரை தெய்வமாகப் போற்ற வேண்டும் என்ற மந்திரங்கள் இருக்கின்றன. இங்கும் முதலில் அன்னையைப் தான் போற்ற சொல்லப்படுகிறது.

அன்னைக்கு இந்த முதல் இடம் இருக்க மற்றும் பல காரணங்கள் உள்ளன. ஒரு அன்னையிடம் நிறைந்துக் காணப்படும் ஒரு அரும் பெரும் குணம் “க்ஷமா” (பொறுமை, மன்னித்தல், பொருட் படுத்தாதிருத்தல்) என்பதாகும். உடல் வலி, மன வலி, தொல்லை, கஷ்டம் அல்லது தொந்திரவு எப்படி வேண்டுமானாலும் அவைகளைச் சொல்லுங்களேன். ஒரு அன்னைக்கு மேற்சொன்னவைகளில் எது ஒன்று வந்த போதும் அவற்றிற்கு சேய் காரணமாக இருந்தாலும். அல்லது அந்த சேயே செய்திருந்தாலும். எப்படி எது இருந்த போதும்,

அந்த அன்னை அந்தப் பிள்ளையை மன்னித்துப் பொறுத்துக் கொள்வாள்.

எப்பொழுதும் எக்காரணத்தினாலும் தன் மக்களை வெறுத்து அனாதரவு மட்டும் செய்யவே மாட்டாள். மாறாக கைமாறு கருதாத அன்பினால் அணைத்துக் கொள்வாள். அளவற்ற பொறுமையை ஸ்வீகரித்துக் கொள்வாள் "க்ஷ்மா" என்றால் பூமி. அதிலிருந்து தான் க்ஷமா (பொறுமை) என்பது வந்தது. "பொறுமைக்கு பூமாதேவி." என்பார்கள். தன்னை வெட்டுகிறவர்களையும் பல விதத்திலும் துன்பத்தை அளிப்பவர்களையும் தாங்குகிறது பூமி. அது போலவே ஒரு தாயும் தனது பிள்ளைகளின் செயல்களை பெரும் குறையாகக் கருதாமல் எந்த நேரத்திலும் தாங்கிக் கொள்வாள்.

அன்னையின் மற்றொரு குணம் தனக்கு மிகவும். பிடித்தவைகள் எதுவாக இருந்தாலும் குழந்தையின் காரணமாக தவிர்க்க வேண்டியிருந்தால் அவைகளை தயக்கமின்றி மறந்து துறந்தும் விடுவாள். எந்த நேரமானாலும் சலிப்போ அல்லது உடல் அலுப்போ பாராமல் தன் குழந்தைகளுக்கு பிடித்ததைச் செய்து கொடுக்கவும் தயங்கமாட்டாள். தன் மக்களின் தேவைகளை முன் வைத்து தன் தேவைகளை பொருட்படுத்தமாட்டாள். சேயின் தேவைகளை அன்னையைவிட வேறு யாருக்கு நன்கு தெரியும்?

மாதராய் பிறந்திட மாதவம் செய்திட வேண்டும் என்று பாடினார் மகாகவி. இறைவனது கூற்றிலே ஒன்று படைப்பு. அதிலே பெரும் பங்கை பெண்ணினத்திற்கு தான் தாய்மை என்னும் வரம் மூலம் அளித்தான். அவர்களை தனது பிரதிநிதியாக எங்கும் வைத்தான். அதனால் தானோ என்னவோ அவனால் நிம்மதியாக மற்ற வேலைகளைப் பார்க்கமுடிகிறது. இறைவனின் லோக ஸ்ருஷ்டியில் அவர்கள் பங்கு தானே மகத்தானது!! உயிரினங்கள் தொடர்ந்து இன்னும் வாழ்வதற்கு தாய்மையை தாங்கும் பெண்ணினமே என்பது மறுக்க முடியாத உண்மை அல்லவா?

சத்தியம் என்பதும் அன்னையிடமிருந்து தானே ஆரம்பமாகிறது. அவள் தனது குழந்தைக்கு அப்பாவை அடையாளம் காட்டும் போது அங்கு சத்தியம் தொடங்குகிறது அல்லவா?

தெய்வங்களைப் பற்றியும் புண்ணிய நதிகளைப்பற்றியும் வேதாந்த விஷயங்களைப் பற்றியுமே தனது நூல்களின் சொல்லியுள்ள ஆதி சங்கரர், ஒரு விதி விலக்காக ஒரு தனி மனிதரைப் பற்றி அதாவது தனது அன்னையைப் பற்றி ஒரு பஞ்சகம் இயற்றியுள்ளார். அப்படி அந்த தாய்க்கு ஒரு தனிப் பெருமை தர எப்படி சம்பவங்கள் அமைந்தன என்பதை தொடர்ந்து பார்ப்போம்.!

ஒரு கால கட்டத்தில் அவைதிகமான பல மதங்கள் தோன்ற ஆரம்பித்து ஹிந்து மதம் நலிவுற்று இருந்தது. மக்களின் மனதில் விபரீத விளைவுகளை ஏற்படுத்திக் கொண்டிருந்தன. வழக்கமாக செய்து கொண்டு வந்த ஸனாதன தர்மங்களையும், கர்மாக்களையும், வழிப்பட்டு வந்த தெய்வங்களையும் தொடர்வதா, அல்லது அவைகள் தேவையற்றவனவா என்னும் மனக் குழப்பத்திற்கு உள்ளானார்கள் ஹிந்து வைதிக மதத்தை தர்ம உத்தாரணம் செய்ய வேண்டிய அவசியம் இருந்தபடியால், உமா பதியான சிவ பெருமான் சங்கரராகப் அவதரித்தார்.

சங்கரர் இள வயதிலேயே தந்தையை இழந்து விட்ட படியால் தாயாருக்கு அனுசரணையாக இருந்து வந்தார். அவருக்கு உபநயனம் செய்விக்கும் ஏற்பாடுகளையும் அவரது அன்னையே செய்தார். இவர் எட்டு வயதிற்குள் குருகுல வாசம் செய்து அதீத புத்தி ப்ரகாசத்துடன் நான்கு வேதங்களையும் கற்றுணர்ந்தார்.

சங்கரரின் அவதாரக் காரணத்தை நிறைவேற்றும் தருணம் வந்தது. இக் குடும்பத்திலிருந்து பிரிந்து சன்னியாச வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டிய கட்டமும் வந்தது வழக்கம் போல் ஒரு நாள் அருகிலுள்ள பூரணா ஆற்றில் ஸ்னானம் செய்ய தாயாருடன் சென்றபோது அவர் காலை ஒரு முதலை பற்றிக் கொண்டது. இந்த முதலை துர்வாசரால் சபிக்கப்பட்ட ஒரு கந்தர்வன் அவன் சாப விமோசனம் அடைய சங்கரரின் காலைப் பற்றிக் கொள்ள வேண்டும் என்னும் நிபந்தனையும் இருந்தது. அந்த லீலையின் அங்கமாக முதலையோ “சங்கரர் சன்னியாசம் வாங்கிக் கொண்டால் அவரை விட்டு விடுவதாக” வாக்களித்தது.

பிள்ளைப் பிழைத்தால் போதும் என்னும் புத்திர பாசத்தினாலே சங்கரரின் தாயார் ஆர்யாம்பாளும் சங்கரர் சன்னியாசம் வாங்கி

கொள்ள ஒப்புதல் அளித்தார். மறுகணமே முதலை காலை விட்டது. சங்கரரும் உலகப் பற்றை விட்டார். தனியாக விடப்பட்டு விட்டோமே என்னும் துக்கத்தில் மூழ்கியிருந்த அன்னையை அவரது இறுதி நேரத்தில் வந்து ஸம்ஸ்காரங்கள் செய்வதாக சொல்லி ஆறுதலாக வாக்களித்தார்.

கௌடபாதரின் சிஷ்யரான ஸ்வாமி கோவிந்தபாதரிடம் சிஷ்யரானார். இந்தியா முழுவதும் திக்விஜயம் செய்து தனது வாதத் திறமையாலும் அவரின் அசாத்திய ஞானத்தாலும் பல பண்டிதர்களை ஜெயித்து அத்வைத தத்துவத்தை நிலை நாட்டினார். பல தத்துவ நூல்களும் தெய்வங்களின் குணாதிசயங்களை விளக்கி அற்புத ஸ்தோத்ரங்களையும் இயற்றினார். ஐந்து மடங்களையும் ஆறு வழிபாட்டு முறைகளும் நிறுவினார். மறுபடியும் ஹிந்து வைதிக ஸனாதன மதம் நிலைக்கச் செய்தார்.

அப்படி அவர் திக் விஜயம் செய்து கொண்டிருக்கையில் அவரது தாயாருக்கு உடல் நலம் குன்றியதாகாவும் மரணம் எப்பொழுது வேண்டுமானாலும் நேரிடலாம் என்றும் அவருக்கு தெரிந்தது. அவர் காலடி வந்தார். அன்னை இறந்துவிட்டப்படியால், அன்னைக்கு வாக்கு கொடுத்தப்படி அவரே அந்திமக் க்ரியை செய்ய நினைத்தார். மனதிலே ஏற்பட்ட துக்கத்திற்கு வடிகாலாக ஐந்து ஸ்லோகங்கள் இயற்றினார். அவர் அப்பொழுது உணர்வு பூர்வமாக இயற்றிய ஐந்து ஸ்லோகங்களை இனி காண்போம்.

## மாத்ருகா பஞ்சகம்

**1. ஆஸ்தம் தாவதியம் ப்ரஸுதிஸமயே துர்வாரசூலவ்யதா**
**நைருச்யம் தநுசோஷணம் மலமயீ சய்யாச ஸம்வத்ஸரீ !**
**ஏகஸ்யாபி ந கர்பபாரபரண க்லேஸஸ்ய யஸ்யாக்ஷம:**
**தாதும் நிஷ்க்ருதி முந்நதோஅபி தனய தஸ்யைஸ்ஜனன்யை நம:!!**

"அம்மா, பிரஸவ சமயத்தில் பொறுத்துக் கொள்ள முடியாத கடுமயான மற்றும் கூர்மையான வலி அடி வயிற்றிலே ஏற்பட்டிருக்கும். என் நலம் கருதி) ருசியற்ற உணவை உட்கொண்டு உன் உடம்பு வாடி மெலிந்திருக்கும். ஒரு வருட காலம் என் மலம் முதலியவைகளால் படுக்கை நினைந்து உன் தூக்கத்தை

போககியிருக்கும். ஒரு பிள்ளை என்னதான் உன்னத நிலைக்கு வளர்ந்து இருந்தாலும் கர்ப்ப காலத்தில் தன்னை வயிற்றில் சுமந்து ஒரு தாய் பட்ட கஷ்டங்களுக்கெல்லாம் எதைக் கொண்டுத் திருப்பி செலுத்தி ஈடுகட்ட முடியும்? பரிகாரம் தான் ஏதும் செய்ய முடியுமா? இவ்வளவு சிரமங்களையும் பொறுத்துக் கொண்ட அன்னையே, உனக்கு நமஸ்காரம்."

ஒரு பெண் முழுமையை அடைய தாய்மை அவசியமாகிறது. ஒரு புது ஜீவனை உலகத்திற்கு கொண்டு வரும் ஒரு நிறைவு, இருப்பதால் தாய்மையில் கஷ்டங்கள் பல இருந்தும் பெண்கள் அந்த வேதனையைப் பொறுத்துக் கொள்கிறார்கள்.

ஆனால் அதில் அவர்கள் படும் கஷ்டங்கள் தான் எத்தனை எத்தனை! ஒரு பெண் கருவுற்றிருக்கிறாள் என்பது உறுதியானவுடன் குடும்பத்தில் அனைவருக்கும் பெரும் சந்தோஷம் ஏற்படுவது இயற்கை. ஆனால் அந்தப் பெண்ணிற்கோ மகிழ்ச்சியோடு சிரமமும் ஏற்படும். முதலில் குமட்டல் உண்டாகி எந்த ஆகாரமும் உள்ளே தங்காது. தலைவலி சேர்ந்துக் கொள்ளும் பசிக்கும் ஆனால் ஆகாரம் உட்கொள்ள பயமாகமிருக்கும் அன்ன த்வேஷம் ஏற்பட்டது போல ஒரு பிரமை உண்டாகும். எதையாவது சாப்பிட்டால் தேவலை போலிருக்கும். ஆனால் வயிற்றில் வளரும் குழந்தைக்கு அது பாதகம் விளைவிக்குமோ என்னும் கவலை ஆட்கொள்ளும்.

குழந்தை வளர வளர, தாயின் உடம்பில் பல மாற்றங்கள் காணப்படும். உடலில் பாரமும் ஏறும். அது அப்பெண்ணின் இயக்கத்தையும் நடமாட்டத்தையும் பெருமளவு பாதிக்கும். உடலில் மிகுந்த களைப்பும், சில உடற் கூறுகளில் கோளாறும் ஏற்படுத்தும். தூக்கம் என்பது வழக்கம் போல் இராது. தவிர மிகுந்த கவனத்துடன் ஆகாராதிகளை உட்கொள்ள வேண்டும். குறித்த நாள் வரும் வரை இறக்கி வைக்க முடியாத பாரமானதால் பொறுத்தே ஆகவேண்டும். இதனிடையே ஆறுதலான விஷயம் என்னவென்றால் குழந்தையின் அசைவுகள் மனதிலே பரபரப்பையும் மகிழ்ச்சியும் உண்டாக்கும்.

பிரசவ வலி என்பது தாங்க முடியாத வலி. பெண்கள் ப்ரசவீக்கும்போது, புனர்ஜன்மம் எடுக்கிறார்கள் என்பது அனைவருக்கும் தெரிந்தது தானே!

குழந்தைக்கு ஆகாரம் அன்னையின் மூலம் தான் என்பதால் அன்னை உட்கொள்ளும் உணவில் கட்டுப்பாட்டுடன் பத்தியத்தை கடைப்பிடிக்க வேண்டும். ஆசைப்பட்டதை சாப்பிட்டுவிட முடியாதே! குழந்தைக்கு தூக்கமென்பது ஒரு ஒழுங்குக்கு வராது என்பதால் தாயின் தூக்கம் பெரிதும் குறைந்து விடும்.

இப்படி அன்னையின் பலத் தியாகத்திலே தான் ஒவ்வொரு குழந்தையும் வளருகிறது.

2. குருகுலமுபஸ்ருத்ய ஸ்வப்ன காலே து த்ருஷ்ட்வா
யதிஸமுசித வேஷம் ப்ராருதோ மாம் த்வமுச்சை: !
குருகுலமத ஸர்வம் ப்ராருதத்தே ஸமக்ஷம்
ஸபதி சரணயோஸ்தே மாதரஸ்து ப்ரணாம: !!

“அம்மா, ஒரு சமயம் நான் படித்துக் கொண்டிருக்கும் போது, குருகுலத்திற்கு நீ வந்து என்னிடம் “உன்னை ஒரு சன்னியாசி வேஷத்தில் கனவில் கண்டேனேயப்பா” என்று சொல்லி, தாள முடியாத துக்கத்துடன் உரத்தக் குரலில் அழுதாயே! அம்மா, அப்பொழுது குருகுலம் முழுவதும் உன்னுடன் அழுததே! அன்னையே உன் பாதங்களில் விழுந்து நமஸ்கரிக்கிறேன்.”

சங்கரரின் பெற்றோர்களான ஆர்யாம்பாள் சிவகுரு தம்பதியருக்கு வெகு காலம் குழந்தை ஏதும் இல்லை. அவர்கள் சிவ பக்தர்கள் ஆனதால் சிவனை குறித்து பல நோன்பு இருந்தார்கள். நோன்பென்றாலேயே உடலை வருத்திக் கொள்ளத் தானே வேண்டும். ஈஸ்வரனின் அருளால் அவர்களுக்கு சங்கரர் பிறந்தார்.

துரதிருஷ்டவசமாக ஆர்யாம்பாளுக்கு தன் கணவனை இழக்க நேரிட்டது. அவளது வாழ்வே சங்கரரை மையமாக வைத்துத் தான் இருந்தது. “தன் வாழ்நாளை அவருடன் கழித்துவிட வேண்டும். அவர் மேன்மையடையும் போது ஆனந்தம் அடைய வேண்டும். அவரை சான்றோன் என அனைவரும் புகழ்வதைக் கேட்டு பெரிதுவக்க வேண்டும். அவருக்கு குடும்ப வாழ்க்கை ஏற்பட்டு தனது குலம் விருத்தி அடைய வேண்டும்” என்றெல்லாம் எண்ணங்களை வளர்த்துக் கொண்டு எதிர்பார்ப்போடு அந்தத் தாய் இருந்தது தர்மம் தானே!

இப்படி எதிர்ப்பார்ப்புகள் அனைத்தும் நொறுங்குவது போல் கனவு கண்டால், நினைவாகி விடுமோ என்று கிலி பிடிப்பதிலும், தனக்கென இருக்கும் ஒரு உறவும் தன்னை வீட்டு விலகி விடுமோ என அஞ்சி அழுவதிலும் நியாயம் இருக்கத் தானே செய்கிறது!

அந்தத் தாயின் சோகம் மற்றவர்களையும் தொற்றிக் கொள்ளாமல் இருந்தால் தான் வியப்பு.

3. ந தத்தம் மாதஸ்தே மரணஸமயே தோய மபிவா
ஸ்வதாவா நோதேயா மரணதிவஸே ச்ராத்தவிதிநா !
ந ஜப்தோ மாதஸ்தே மரணஸமயே தாரகமநு:
அகாலே ஸம்ப்ராப்தே மயிகுரு தயாம் மாதரதுலாம் !!

“அம்மா, நீ இறக்கும் தருணத்தில் உன் அருகில் இருந்து என்னால் தாக சாந்திக்காக ஒரு முழுங்கு ஜலம்கூட தர முடியவில்லை; மரித்த தினத்தில் ஸ்ராத்த முறைப்படி “ஸ்வதா” என்னும் ஹவிஸும் தர இயலாது. பந்தங்களிலிருந்து விடுவிக்கும் ‘தாரக மந்த்திரத்தையும்’ உன் காதுகளில் இறக்கும் தருவாயில் சொல்ல முடியாமல் போய்விட்டது. உனக்கு எவ்விதத்திலும் நான் நிகரில்லாதவன், அம்மா, இருந்தும் காலம் கடந்து வந்த எனக்கு உன் பரம தயையை நீ காட்டவேண்டும்.

நீர் தாகத்தைத் தணிக்கும். உடலை சுத்தம் செய்ய உதவும் புற அழுக்கைப் போக்கும். அத்துடன் ஹிந்து மதக் கொள்கைப் படி புனித நதிகளின் நீரானது மன அழுக்கையும் போக்கும். செய்த பாவங்களையும் தொலைக்கும்.

கருட புராணத்திலே இறக்கும் தருவாயில் இருப்பவர்களுக்கு சாலக்ராமத்திற்கு அபிஷேகம் செய்யப்பட்ட நீரை வாயில் வார்த்தால் அவர்கள் செய்த பாவங்களிலிருந்து விடுவிக்கப் படுவார்களென்றும், அவர்களை வைகுந்த வாசியாகவும் செய்து விடும் எனக் காணப்படுகிறது. அல்லது அதற்கு நிகரான கங்கையின் புனித நீரை புகட்டினாலும் அவர்களது பாவங்களை சாம்பலாக்கி, மறுபிறவியிலிருந்தும் விடுவித்து மோக்ஷத்திலே சேர்த்து விடும் என்றும் சொல்கிறது.

"மேலும் அவர்களது நினைவுக்கு விஷ்ணுவையும் சிவனையும் கொண்டு வர வேண்டும். அவர்களால் சொல்ல முடியாத போதும் மற்றவர்கள் அந் நாமங்களை சொல்வதை அவர்கள் காதில் விழும் படியாவது செய்ய வேண்டும். அப்படி செய்தால் அவர்கள் செய்த பாவமனைத்தும் விலகிவிடும். 'ராம' நாமம் தாரக மந்திரமாக கருதப் படுகிறது. 'ஓம் நாராயணாய' என்பதிலிருந்து 'ரா' என்பதையும். "ஓம் நம சிவாய" என்பதிலிருந்து 'ம' என்னும் எழுத்தையும் ஒன்று சேர்த்து அந்த 'நாமா' உண்டானதாக சொல்லப்படுகிறது. இந்த தாரக மந்திரமானது ஒருவரைப் பிறவிக் கடலைக் கடக்க உதவுவதோடு ஜனன மரண சுழற்சியிலிருந்தும் விடுவிக்கும். இந்த நாமாவை உச்சரித்தால் ஒரு ஆன்மாவுக்கு சம்சார பந்தங்களிலிருந்து விடுதலை கிடைக்கும், மோக்ஷமும் லபிக்கும். இக்குணங்கள் இறைவனின் மற்ற நாமாக்களுக்கும் பொருந்தும். தெய்வ ப்ரக்ஞை கொஞ்சம்கூட இல்லாத அஜாமிளன் "நாராயணா" என்று தன் பிள்ளையை இறக்கும் தருவாயில் கூப்பிட, அவருக்கு அதுவே வைகுந்தம் செல்ல காரணமாகியது.

"தேவதைகளுக்குச் செய்வதற்கே 'ஸ்வாஹா' என்று சொல்ல வேண்டும். பித்ருக்களுக்குச் செய்யும் போது 'ஸ்வதா' என்று சொல்ல வேண்டும். மற்ற ஜீவன்களுக்கு 'ஹந்தா' என்று சொல்ல வேண்டும்."

அக்னியில் "ஸ்வாஹா" என்று சொல்லிக் கொடுக்கும் ஹவிர்பாகம் தெய்வங்களிடம் போய் சேருகிறது. அதுபோலவே நமது முன்னோர்களான பித்ருக்களுக்கு "ஸ்வதா" என்று சொல்லி அளிக்கப்படும் ஹவிர் பாகங்களும் நீரும் போய் சேரும். இவைகளே அவர்களின் ஆஹாரம். ஒவ்வொரு தர்ப்பண தினங்களிலும் பிரதி வருட ஶ்ராத்தங்களிலும் "ஸ்வதா" என்று சொல்லி தரப்படும் அனைத்தும் பித்ருக்களைச் சேரும். ஸன்னியாசி ஆகிவிட்ட ஒருவரால் க்ருஹஸ்தன் செய்யும் பித்ரு காரியங்களை செய்ய ஸாஸ்திரத்தில் இடமில்லை. இப்படி எதுவொன்றும் செய்ய முடியாமல் இருக்கும் அவரை மன்னிக்கும்படி தாயிடம் இறைஞ்சுகிறார்.

ஒரு சன்னியாசி க்ருத்யம் செய்வதையே அங்குள்ள வைதிகர்கள் விதி முறை அனுமதிக்காது என அவர் செய்வதற்கு தடை சொன்னார்கள். ஸந்நியாஸி க்ருத்யம் பண்ணலாமா அது ஸாஸ்திர

விருத்தம் இல்லையா என்று கட்சிக் கட்டிக் கொண்டு நியாயம் பேசினார்கள்.

“தாயார் என்பவளுடைய ஸ்தானம் எல்லாவற்றையும்விட உயர்வானது. அப்படி ஸகல சாஸ்திரத்திலும் இருக்கிறது. மாத்ரு ருணம் (தாயாருக்குப் பட்டுள்ள சாஸ்த்ரீயக் கடன்) யாரையும் விடவே விடாது. பித்ரு ருணத்திலிருந்து கூட ஸௌத்ராமணி என்ற மஹா யாகத்தைப் பண்ணினால் விடுபட்டு விடலாம்; மாத்ரு ருணத்திலிருந்து மட்டும் ஒரு புத்ரன் ஜீவனுள்ள வரை விடு பட முடியாது என்று தர்ம சாஸ்த்திரத்திலேயே இருக்கிறது.”

“பெரிய ருணம் அந்திம க்ரியை செய்து பரலோகம் சேர்ப்பது தான்.” சங்கரர் தான் அவதார புத்ரரே தவிர அவள் அவதார அம்மா இல்லையே! அதனாலே அவள் ருணத்தை அவள் எப்படி ஆசைப்பட்டாளோ அப்படி அவர் தீர்க்கவேண்டும் என்பது தானே நியாயம்? அவள் திருப்திக்காக தஹனம் மாத்ரம் தான் செய்ய நினைத்தார்.”

“சன்னியாசி ஆனாலும் பூர்வாச்ரம மாதா-பிதாக்களின் மரணத்தின் போது மட்டும் அவர் கட்டின வஸ்த்திரத்தோடு ஸ்நானம் பண்ண வேண்டும் என்று இருக்கிறது.”

“இங்கே மாதா பிதா இரண்டு பேருக்கும் ஸம ஸ்தானம் கொடுத்திருக்கிறது என்றால், இன்னொரு விதியோ பிதாவுக்கும் மேலே மாதாவை உயர்த்தி வைத்துச் சொல்லியிருக்கிறது:” ஸர்வ-வந்த்யேந யதிநா ப்ரஸூர்-வந்த்யா ச ஸாதரம்:” எல்லோரும் ஸந்நியாஸியை நமஸ்கரிக்கணும். மற்ற ஜனங்களில் ஸகலருமே அவரைவிட வயஸில் எத்தனை பெரியவர்கள் ஆனாலும் நமஸ்கரிக்கணும். “ஸர்வ” ஜனங்களும் என்று இப்படிச் சொல்லும்போது அதில் அப்பாவும் அடக்கம் தான். ஆனால் அம்மா மட்டும் அடக்கமில்லை. ஸந்நியாஸியாகி விட்ட புத்ரனை அவள் நமஸ்காரம் செய்யவேண்டாம். அது மாத்திரமில்லை. அவளை இவர் (-ஸந்நியாஸி) -நமஸ்காரம் செய்ய வேண்டும்:” - வந்த்யா” “இப்படி விதி இருக்கே!” என்று ஒரு கடமையாக மட்டும், “கடனே” என்று பண்ணினால் போதாது. “ஸாதரம்” - “மரியாதையான அன்போடு கூட “நமஸ்கரிக்கணும்.” பரமாச்சாரியாள் அருளியது.

இதிலிருந்து ஒரு அம்மாவுக்கு கொடுக்கும் உயர்ந்த ஸ்தானம் தெளிவாக புரிகிறது அல்லவா?

அங்குள்ள அந்தணர்கள் சங்கரர் அவரது தாயை தஹனம் செய்வது ஸாஸ்திரத்திற்கு புறம்பானதாக கருதியதால் எந்த வித ஒத்துழைப்பும் தரவில்லை. சங்கரர் அன்னைக்கு வாக்கு கொடுத்தபடி க்ருத்யம் செய்தார். வேறு இடத்தில் தஹனம் செய்ய அனுமதிக்காததால் தன் வீட்டு பின்புறத்தில் அங்கு கிடைத்த ஈரமான வாழைப் பட்டைகளைக் கொண்டே சிதை மூட்டினார். தன் யோக சக்தியால் அந்த சிதையையும் எரிய வைத்தார்.

4. முக்தாமணி ஸ்த்வம் நயனம் மமேதி
ராஜேதி ஜீவேதி சிரம் ஸுதத்வம் !
இத்யுக்தவத்யா ஸ்தவ வாசி மாத:
ததாம்யஹம் தண்டடுலமேஷ சுஷ்கம் !

“என் முத்து மணியே! என் கண்ணே! என் ராஜாவே! நீ தீர்க்க ஆயுஸோடு இருக்கணும்” என்றெல்லாம் கொஞ்சி பூரித்தாயே! அந்த அன்னையின் வாயில் வறட்டு அரிசியை நான் இடும்படி ஆகிவிட்டதே.”

பெண்கள் பொதுவாகவே அலங்காரம் செய்து கொள்வதில் நாட்டம் உள்ளவர்கள். அதிலும் ஆபரணங்கள் அணிந்து கொள்வதில் மிகவும் பிரியம் கொண்டவர்கள். அணிகலங்களில் விலையுயர்ந்த கற்கள் பதித்த ஆபரணங்களின் மேன்மையும் அறிந்தவர்கள். ஆகவே தான் பெற்றெடுத்த பிள்ளையையும் “தங்கமே, முத்தே, மணியே, மாணிக்கமே” என்று பலவாறாக உயர்ந்த விஷயங்களோடு ஒப்பிட்டு கொஞ்சுவதென்பது ஒரு வழக்கமாகி விட்டது.

மனிதனின். “எண் ஜாண் உடம்பிற்கு சிரஸே ப்ரதானம்” என்று வழக்கத்தில் சொல்வார்கள். உடலிலே பிரதானமாகக் முகம் கருதப்படுகிறது முகத்திலும் கண்களுக்கு கூடுதல் முக்கியத்துவம் தரப்படுகிறது. கண்கள் விழித்திருக்கும் போது தான் விழிப்புணர்வு அதாவது அனைத்தையும் அறிந்து புரிந்துக் கொள்ளும் நிலை இருப்பதாக கருதுகிறோம். தூங்கும் போது உணர்வுகள் அனைத்தும் ஒடுங்கி விடுகின்றன. ஆன்மா மட்டும் தான் விழித்திருக்கிறது.

எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும் என்றார் வள்ளுவர். கம்பனோ, தசரதரின் (ராமரை) பிரிவாற்றாமையை ஒப்பிடும்போது ஒரு பார்வையற்றவர்க்கு கண்களைக் கொடுத்து, உலகைக் காண வைத்து மறுபடியும் பார்வையைப் பறித்துக் கொண்டால் என்ன தவிப்பு இருக்குமோ, அப்படி இருந்ததாக விவரிக்கிறார். ஃபிரான்ஸ் தேசத்தவர் "கண்கள் எதைக் காணவில்லையோ மனம் அதற்காக அழாது" "எந்த ஒரு அளவும் கண்களுக்கு சரி என்று தோன்றவில்லையாயின் அளவெடுத்துப் பார்த்தாலும் சரியாக இராது" என்று கண்களின் உயர்வை கூறுவர்.

நாம் வாழ்க்கையில் ஏங்குவது தரிசனத்திற்காகத் தானே? வருங்காலத்தைப் பற்றி சிந்திப்பவரை தொலை நோக்கு பார்வை கொண்டவர் (தீர்க்க தரிசனம் உள்ளவர்) என்கிறோம். ஆக கண் என்பது மிகவும் முக்கியத்துவம் பொருந்திய ஒன்றாகும். தவிர, நமக்கோ தீராத விளையாட்டுப் பிள்ளை அந்தக் கண்ணன் தானே! ஆகவே தாயார் பிள்ளையை "கண்ணே" என்று அழைப்பதும் சரிதானே!

உலகை ஆளப்பிறந்தவன் அரசன். அவனைத் தான் அனைவரிலும் முதல்வன் என்கிறோம். ஒரு தாய் தன் பிள்ளை அப்படி இருக்க வேண்டும் என்ற ஆசையில் தானே 'ராஜாவே' என்கிறாள். (குடியரசு ஆனதால் 'மந்திரியே' என இன்னும் மாறவில்லை. ஒருவேளை மந்திரிகள் வீட்டிலும் "ராஜாவே" என்று தான் குழந்தைகளைக் கொஞ்சுகிறார்களோ!)

குழந்தைக்கு தாய் மூலம் கிடைக்கும் உணவு போதாது எனக் கருதி ஆறாவது மாதத்தில், ஒரு நல்ல நாளில் வீட்டிலோ அல்லது கோயில் விளாகத்திலோ அன்னத்துடன் தயிர், தேன் நெய் கலந்து குழந்தைக்கு பெற்றோர் ஊட்டுவார்கள். (அன்ன ப்ராசனம்). இதிலிருந்து தொடர்ந்து சாப்பிடும் அன்னம் குழந்தையுடைய க்ஷேமத்திற்கும், தேக ஆரோக்யத்திற்கும் நீண்ட ஆயுளுக்கும் எப்பொழுதும் காரணமாக இருக்க வேண்டும் என்றும் பெற்றோர்கள் ப்ரார்த்தித்துக் கொள்வார்கள். ஒவ்வொரு நாளும் நேரம் தவறாமல் 'நிலா,' மற்றும் வேறு பொருள்கள் எதையாவது 'பராக்கு' காட்டி குழந்தைக்கு உணவை திணிப்பதில் யாரேனும் நம் அன்னையர்களை

மிஞ்ச முடியுமா? அப்படிப்பட்ட அன்னைக்கு ‘வறட்டு அரிசியை’ (வாக்கரிசியை) போடும் போது இளகாத பிள்ளைகள் நெஞ்சம் தான் இருக்குமா? சங்கரரும் துக்கமடைகிறார்.

5. அம்பேதி தாதேதி சிவேதி தஸமின்
ப்ரஸூதிகாலே யதவோச உச்சை: !
க்ருஷ்ணேதி கோவிந்த ஹரே முகுந்தே
த்யஹோ ஜநந்யை ரசிதோளயமஞ்ஜலி: !!

“அம்மா, அன்று ப்ரஸவ நேரத்தில் தாங்க முடியாத வலியில், ‘அம்மா’ அப்பா, மற்றும் சிவா கிருஷ்ணா, கோவிந்தா, ஹரே, முகுந்தா என பகவன் நாமாக்களைச் சொல்லி உன்னை மறந்து உறக்க குரல் எழுப்பிருப்பாய். தாயே! இன்று மனமுருகி நான் உனக்கு அஞ்சலி செய்கிறேன்.” (வலியிலும் முதலில் கூப்பிடுவது அன்னையைத் தான் என்பதை கவனிக்கவும்)

பிரசவ சமயத்தில் பெண்கள் மிகவும் கடும் முனைப்பான வேதனைக்கு உள்ளாகிறார்கள். அந்த வலியில் அவர்கள் உரத்த குரலில் வேதனையை வெளிப்படுத்துவார்கள். வலி உச்சக் கட்டத்தில் இருக்கும்போது, இனி இந்த மாதிரி ஒரு இக்கட்டில் மாட்டிக் கொள்ளக் கூடாது என “பிரசவ வைராக்யம்” எடுத்துக் கொள்ளவும் தோன்றுமாம். இப்படியாக ஒரு அன்னையின் வேதனையில் பிறந்து, அன்னையில் தியாகத்தில் வளர்ந்து அவளது சீராட்டல்களிலும் பாராட்டுகளிலும் அனைவரும் சக்தி பெற்று வாழ்கிறோம். சங்கரர் தன் தாயை இறுதிமுறையாக மனமுருகி வந்தனம் செய்கிறார்.

மாத்ருகா பஞ்சகம் முற்றிற்று.

இந்த உணர்ச்சி குவியலான ஒரு புதல்வனின் துக்கத்தைச் சொல்லும் கவிதைகளுக்கு இணையாக மற்றொரு சம்பவமும் உண்டு. வைராக்யம் என்றாலே இன்னொருத்தர் நினைவு வராமலிருக்காது. பெரும் செல்வம் வீடு மனைவி அன்னை அனைவரையும் விட்டுவிட்டு துறவியாக வாழ்ந்தார். காவேரிப்பூம்பட்டினத்தைச் சேர்ந்த அவர் ‘பட்டினத்தார்’ என்று அழைக்கப்பட்டார்.

அவருக்கு தன் அன்னையின்மீது மிகுந்த மரியாதையும் பாசமும் உண்டு. தன் அன்னையின் உடல் நலம் குன்றி வருகிறது என்பதைக் கேட்ட மாத்திரத்தில் செல்வமனைத்தும் துறந்த அவரால் தாயின் மேல் கொண்டுள்ள பாசத்தை துறக்க முடியவில்லை. துக்கப் படாமல் இருக்க முடியவில்லை. அன்னையைக் காண ஓடோடி சென்றார். அவரைப் பார்க்கும் வரை காத்திருந்து, பட்டினத்தார் வந்தவுடன் அவரைப் பார்த்தவுடன் அவரின் தாயார் உயிர் நீத்தார்.

பட்டினத்தாருக்கு தன் தாயார் இவரைக் கர்ப்பத்தில் தாங்கிய நேரத்திலிருந்து தாய்மையால் பட்டிருக்கக்கூடிய கஷ்டங்கள் மற்றும். தன்னை குழந்தைப் பருவத்தில் தன் அன்னை பாலூட்டி, சீராட்டி பாராட்டியதெல்லாம் நினைத்துப் பார்த்தார். அப்படி செல்வத்திலே தன்னை தாங்கிய அந்த அன்னையில் உடல் விறகு, கட்டை, விறட்டி இவைகளால் குத்தி கிழித்து இம்சிக்கப் படுவதை அவரால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. சிதையிலிருந்து அவை அனைத்தையும் விலக்கச் சொன்னார். பிறகு மென்மையான வாழை இலையையும் அம் மரப் பட்டைகளாலும் அன்னையின் உடலை மறைக்கச் சொன்னார். பிறகு,

**முன்னையிட்டதீமுப்புரத்திலே**
**பின்னையிட்டதீதென்னிலங்கையி**
**லன்னையிட்டதீயடிவயிற்றிலே**
**யானுமிட்டதீமூள்கமூள்கவே**

என்னும் பாடலைப் உணர்ச்சிப் பெருக்குடன் பாடினார். அவரது சக்தியால் சிதையும் எரிய ஆரம்பித்தது.

மேற்கூறிய சம்பவங்களிலிருந்து நமக்கு தெளிவாக புரிவது உலக பந்தத்தை வேண்டுமானால் விட்டுவிட முடியும் ஆனால் தாயின் அன்பை மறப்பது மாத்திரம் அவ்வளவு சுலபமல்ல. தாயின் அன்பானது விலகாது. எங்கிருந்தாலும் எப்பொழுதும் நெஞ்சிலே ஈரத்தோடு இருந்துக் கொண்டே இருக்கும். அதனால் அன்னையின் மேன்மையை உணர்ந்து அம்மாவை அவர்களின் வாழ் நாளில் போற்ற வேண்டும் என்பதே தெரிந்துக் கொள்ள வேண்டிய முக்கிய கருத்தாகும். நாம் எவ்வளவு செய்தாலும் அன்னை நமக்கு

செய்தவைகளுக்கு ஈடாகாது என்பதை மனதில் திடமாக புரிந்து கொள்ள வேண்டும்.

“மாதா பிதாக்களோடு அபிப்ராய பேதங்கள் வரக் கூடும். இம்மாதிரி விஷயங்களில் சாந்தமாக எடுத்துச் சொல்லிக் “கன்வின்ஸ்” பண்ண வேண்டும். அவர்களிடம் சண்டைப்போடக் கூடாது. ஏனெனில் இவர்களுக்கு சுச்ரூஷை செய்யும் பலனை உயர்த்திச் சொல்லியிருப்பது போலவே, இவர்களுக்குக் கொஞ்சம் த்ரோஹம் செய்துவிட்டாலுங்கூட மஹாபாபம் ஸம்பவிக்குமென்று எச்சரித்திருக்கிறது.”

ஒரு அன்னை எவ்வளவுதான் கெட்ட மதிகொண்டு செய்யத் தகாத செயலைச் செய்திருந்தாலும் அவளது பிள்ளை அவளைப் பற்றி கேவலமாக பேசுவது ஒரு நல்ல இயல்பாகாது. அவளின் தீயச் செயலுக்காக மற்றவர்கள் அவளை இகழும்போது அந்த தனையன் அவளைப் புகழ வேண்டாம். ஆனால் எதும் பேசாமல் இருந்து விடலாமே! அப்படி செய்யாமல் ஒரு அறப்போரை அந்தப் பிள்ளையே துவங்குவது என்பது மிகவும் விரும்பத் தகாத செயலாகும். அது ஒரு பண்புள்ள மகனுக்கு அழகல்ல. இப்படி ஒரு கருத்தை பரதனின் சிறப்பியல்புகளை சிலாகித்து கூறிக் கொண்டே வரும் ரைட் ஹானரபிள் வி.எஸ். ஸ்ரீனிவாச சாஸ்திரியார் இறுதியாக தெரிவிக்கிறார். இவர் இவரது ஆங்கில ஆளுமையால் ஆங்கிலேயர்களையே அசர வைத்தவர்.

“தாய் தந்தையர் ஜீவிய வந்தர்களாக இருக்கையில், அவர்களிடம் பணிவுடன் நடந்து கொண்டு, அவர்களுக்கு நம்மால் இயன்ற சௌக்கியமெல்லாம் செய்து தர வேண்டும். தாய் தந்தையர் நமக்காக ஆதியில் செய்துள்ள தியாகங்களுக்கு நாம் பிரதியே செய்ய முடியாது. அவர்களது மனம் கோணாமல் அவர்களை வைத்துக் காக்க வேண்டும்.” - பரமாச்சாரியாள்

இறந்துவிட்ட அன்னக்கு நாம் உணர்ச்சி பெருக்குடன் மனப்பூர்வமான பண்பான வார்த்தைகளால் அழகியதோர் ஹாரமாக்கி அன்னைக்கு அஞ்சலி செய்து சர்ம ஸ்லோகம் வாசிப்போம். அத்துடன் நின்று விடாமல் மாத்ரு ருணம் தீராது என்பதால் நமது ஜீவன்

உள்ள வரை செய்ய வேண்டிய கர்மாக்களை தவறாமல் செய்ய வேண்டும்.

நம்மிடையே வாழ்ந்து நடமாடி, அவர் காலத்தில் வாழ்ந்தோம் என்னும் ஒரே காரணத்தாலேயே நம் ஜன்மங்களை எல்லாம் உய்வித்த காஞ்சி மாமுனிவர் அரிய மஹான் மஹா பெரியவா அவர்களின் அருளுரையைப் தொடர்ந்து பார்ப்போம்.

"ஒரு குழந்தை பசியாக இருக்கட்டும், ஒரு வஸ்து வேண்டும் என்று அடம் பிடிக்கும் நேரத்திலாகட்டும், வெளியே போக ஆசையாக இருக்கும் போதும் சரி, உடம்பு உபாதை ஏதாகட்டும் - எதுவானாலும் "அம்மா, அம்மா" என்று அந்த ஒருத்தியையே குழந்தை பிடித்துக் கொண்டிருக்கும். அதுபோல நாம் பரமாத்மாவை மாதாவாக பாவித்து விடாப்பிடியாகப் பிடித்துக் கொள்ள வேண்டும். பரமாத்மாவை ஜகன் மாதாவாகவும் நம்மைக் குழந்தைகளாகவும் ஆக்கிக் கொள்ள வேண்டும். "நாம் குழந்தையாகி விட வேண்டும்" என்று உபநிஷத்தும் உபதேசிக்கிறது."

"இது ஏதோ இல்லாத ஒன்றை நாமே கல்பித்துக்கொண்டு ஸந்தோஷப்படுவது என்று அர்த்தமில்லை. வாஸ்தவத்திலேயே ஸகல குணங்களுக்கும் ஆஸ்ரயமாக இருக்கப்பட்ட பரமாத்மாவிடம் பூர்ணமான மாத்ருத்வமும் இருக்கத்தான் செய்கிறது. சிந்தித்துப் பார்த்தால் இத்தனை அம்மாக்களுக்கும் அந்த அம்மாக்களுடைய வாத்ஸல்யத்துக்கும் தியாகத்துக்கும் அந்தப் பரமாத்மா தானே மூலம்? யதார்த்தத்திலேயே பரமாத்மா மாத்ரு தத்வம் நிரம்பியவர் தான். "தாயிற் சிறந்த தயாவான தத்துவனே!" என்று மாணிக்கவாசகர் சொல்வது இதைத் தான். "அம்மையே அப்பா, ஒப்பிலா மணியே" என்றும் அவர் சொல்கிறார். அப்பர் ஸ்வாமிகளும் "அப்பன் நீ, அம்மை நீ" என்கிறார். பரமாத்மாவின் மாத்ரு பாவத்தை அநுபவித்துத் தான் அவர்கள் இப்படியெல்லாம் சொல்லியிருக்கிறார்கள்."

(இங்கு சொல்லப்படும் 'மாத்ரு பாவத்தை' தன்னை வளர்த்தச் சிறிய தகப்பனார்களிடம் இந்தப் தொகுப்பாளன் உணர்ந்தான் என்பதை இங்கு பதிவு செய்யக் கடமைப் பட்டிருக்கிறான்.)

“இந்த சரீரங்களின் முடிவில் அம்மா, பிள்ளை உறவும் முடிவுக்கு வந்து விடும். வெவ்வேறு ஜன்மாவில் வெவ்வேறு அம்மா வருகிறாள். இத்தனை அம்மாக்களுக்கும் காணப்படும் அன்புக்கு மூலமான பரமாத்மா மட்டும் எப்போதும் சாஸ்வதமாகத் தொடர்ந்து வருகிறார். இதனால்தான் ‘தொடர்ந்து வரும் தாயானை’ என்கிறார்கள். அழிந்து போகிற உடம்புக்கு மட்டும் அம்மாவாக இல்லாமல் அழியாத உயிருக்கும் அம்மாவாக இருந்து, பரமாத்மாவே இஹத்திலும் பரத்திலும் ரக்ஷிக்கிற பரம கருணை கொண்ட தாய்.” அவனே தாயுமானவன், மாத்ருபூதேஸ்வரன்.”

“ஒரு ஐந்து பேர், பத்துப் பேருக்குக் கொஞ்ச காலம் மட்டும் தாயாராக இல்லாமல், புழு பூச்சியிலிருந்து யானை, சிங்கம் வரை, மநுஷ்யர்களிலிருந்து தேவர்கள் வரை இத்தனை ஜீவராசிகளுக்கும் எத்தனை காலத்துக்கும் அம்மாவாக இருப்பது பரமாத்மாவே!. ஒவ்வொன்றுக்கும் வேண்டிய ஆஹாராதிகளை, போக்ய வஸ்துக்களை லோகத்தில் பண்ணி வைப்பது அந்தப் பெரிய அம்மாதான்!. குழந்தைக்காகத் தாயாரிடம் பால் உண்டாகிறது; வயிற்றிலிருக்கும் போதே தொப்புள் கொடி வழியாக அவளிடமிருந்து அதற்கு ஆஹாரம் போகிறது என்றால், இந்த ஏற்பாட்டை ஒவ்வொரு தாயாரும் தானாகவா செய்து கொண்டாள்? மஹா மாதாவாக ஒரு பராசக்தி இருந்து கொண்டு தான் இப்படியெல்லாம் ஏற்படுத்தி வைத்திருக்கிறாள் என்பது தானே சத்தியம்!”

“பரமாத்மா நம்முடைய உடலை மட்டுமின்றி உயிரையும் வளர்க்கிற அம்மா. அறிவை வளர்த்து ஆத்மாநுபவத்தைத் தருகிற அம்மா. வயிற்றுக்குப் பால் தருகிற மாதிரி ஞானப்பால் கொடுத்து, அம்மா பிள்ளை (பரமாத்மா, ஜீவாத்மா) என்ற பேதமில்லாமல் ஒன்று சேர்த்துக் கொள்கிற அம்மா.”

“ஆகவே இந்த ஜன்மாவிற்கு காரணமாயிருக்கிற தாயையும் தெய்வமாக வழிபடவேண்டும். நம்முடைய எல்லா ஜன்மாக்களுக்கும், மற்றும் ஜன்மா என்பது அறவே நீங்குவதற்கும் துணையாக இருக்கிற பரமாத்மாவையும் தாயாக வணங்கத் தான் வேண்டும்.”

நம் அனைவருக்கும் ரூபமுள்ளது. நாம் குழந்தைகளாக யாருக்கு இருக்கிறோமோ, அந்த தாய்க்கு ரூபமென்று ஒன்று வேண்டுமல்லவா?

அதனால் தான் அருபத்திற்கு ரூபம் ஏற்படுகிறது. அருபமாக பராசக்தி ரக்ஷிக்கின்றாள் என்றால் போதுமானதாக இல்லை. ஒரு திருஉருவம் ப்ரேமையாக ரக்ஷிக்கின்றாள் என்பதை நாம் பார்க்கும் படி இருந்தால் தான் நம் மனம் நிறைகிறது.

பரமாத்மாவைப் பரம கருணாமூர்த்தியாகப் பார்க்க வேண்டுமானால் அதற்கு அம்பாள் ரூபத்தைவிட வேறில்லை. அம்மாவாக உபாஸிக்க ஆரம்பித்தால் அதுவே ஸகல தாப சமனமான, ஸமஸ்த பாப நிவாரகமான புண்ய தீர்த்தமாகும். அன்புக்கெல்லாம் ஊற்றாக இருக்கிறது அதுதான்.

நம் எல்லோருக்கும் நிஜமாக ஒரே அம்மாவாக - "நமஸ்தே ஜகத் ஏக மாத:" என்று காளிதாஸன் (சியாமளா தண்டகத்தில்) சொன்னது போல ஒரே அம்மாவாகப் - பரமாத்மா இருப்பதை உணரும் போதுதான். எல்லா ஜீவ ஜந்துக்களையும் நம் உடன் பிறப்புக்களாகத் தழுவுகிற அன்பானது ஸித்தியாகும்.

நாம் கோயிலில்லா ஊரில் குடியிருக்கப் போவதில்லை. ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்பதால் தவறாமல் தினந்தோறும் கோவிலில் அந்த ஜகன் மாதாவை வணங்குவோம். தாயினும் சிறந்த கோவில் கிடையாது என்பதற்கிணங்க ப்ரத்யக்ஷமாக ஜகன் மாதாவின் ப்ரதிநிதியாக நம்மை "பெற்றெடுத்த அம்மாவை"ப் பணிந்துப் பாராட்டுவோம்.

நம் வீட்டை அன்பு உலவும் சாந்தி நிலவும் நிறைகள் கொண்ட பொற்கோவிலாக்குவோம்.

ஆதி சங்கரர் அருளிய

# மாத்ருகா பஞ்சகம்

(உரையுடன்)



Compiled by

பி.ஆர். நடராஜன்

பல்லிப்பாக்கம் வேங்கடேச தீக்ஷிதர் ஸ்மிருதி டிரஸ்ட்
பல்லிப்பாக்கம், திண்டிவனம் தாலுக்கா - 604307